பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# பெண் புத்தி மாலை.



இதனை
முன் அச்சிட்ட பிரதிக்கிணங்க

சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி எம். எ. ஷாஹுல் ஹமீது அண்டு ஸன்ஸ்

அவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸில்

அச்சிடப்பட்டது.

---

சுத்தப் பதிப்பு.

1993

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# பெண் புத்தி மாலை.

## காப்பு வெண்பா.

முன்னொளி வாய்ந்த முஹம்மது றஸூல் நபியை
தன்னொளியினாலே சமைத்தானே—மின்னொளிபோற்
பெண்புத்தி மாலைதனைப் பேசிடவே யெவ்வுயிர்க்குங்
கண்ணுற்று நிற்பவனே காப்பு.

## இதுவுமது.

பெண்புத்திமாலையெனப் பேசிடவே யெவ்வுயிர்க்கு
தன்புத்தியில்லாத் தையலரே—பெண்புத்தி
சொன்னார் முஹம்மதுஷைன் தோகையரே கண்டறிந்தின்
கெந்நாளும் வாழ்வீ ரிசைந்து.

---

## கண்ணிகள்.

அல்லா வொருவனை அஞ்சி வணங்கிக்கோ மயிலே
எல்லா மவனென் றிருதயத் தெண்ணிக்கோ குயிலே

மூமினோர் முத்து முஹம்மதைப் போற்றிக்கோ மயிலே எங்கள்
ஆமினார் பெற்ற அஹ்மதென் றெண்ணிக்கோ குயிலே

இல்லல்லா வென்றே இருதயம் பற்றிக்கோ மயிலே நபி
ஸல்லல்லா வென்று ஸலவாத்தை யோதிக்கோ குயிலே

காலை முழித்துக் கணிவா யுளுக்கொள்ளு மயிலே இசை
மேலோன் றஹ்மத்து மேவி யிறக்குவான் குயிலே

விதித்த பறுளுத்தம் வேண்டித் தொழுதுக்கோ மயிலே முன்
கதிக்க கலிமாவைக் கல்பினி லோதிக்கோ குயிலே

மூப்பது நோன்பையுந் தப்பாமலேபிடி மயிலே நீ
துப்புரவாகவே ஹூப்பாய் நடக்கலாம் குயிலே

சகாத்தைச் செய்து ஸலவாத்தை ஓதடி மயிலே நானே
சொர்க்கத்து வாழ்வுஞ் சுகம் பெறுவாயே குயிலே

பத்தா தனக்குப் பணிவிடை செய்யடி மயிலே முன்
கத்த நபிமேற் கட்டுரை செய்தானே குயிலே

# பெண் புத்தி மாலை

வெள்ளிக்கிழமை விடியமுழுகிக்கோ மயிலே தானம்
அன்னம் யவர்க்கெல்லாம் பகுந்து கொடுத்துக்கோ குயிலே

மாலை மகரிபில் மணிவிளக் கேற்றிக்கோ மயிலே இசை
மேலோன் வரிசைகள் வீட்டி லிறக்குவான் குயிலே

பட்டை யுடுத்திப் பரிமணம் பூசிக்கோ மயிலே இன்பங்கள்
கட்டியக் கொங்கைக்குக் கச்சு மிருக்கிக்கோ குயிலே

வார்ந்து முடித்து மணங்கள் பூசிக்கோ மயிலே நீ
சேர்ந்து புருஷனைச் சிந்தை மகிழ்ந்துக்கோ குயிலே

புருஷனுக்கிட்டு நீ போற்றிப்பின் னுண்ணடி மயிலே மெத்த
வரிசைகளான பாக்கத்துண்டாகுமே குயிலே

காலைப் புரட்டி நகைப்போடு பேசாதே மயிலே நல்ல
பூவை முடித்துப் பிறர்மனை போகாதே குயிலே

கண்ணின் மையைக் கதிக்கவிடாதடி மயிலே அது
முன்னிலிருந்து முகத்தைப் பழிக்குமே குயிலே

வாசற்படி நின்று வார்ந்து முடிக்காதே மயிலே கெட்ட
தோஷத்தன மென்று தூதர் சொன்னாரடி குயிலே

உடுத்தாடை சீப்பை ஒருவர்க்கு மீயாதே மயிலே அதிற்
கொடுத்த இரணங் குறைத்த லுண்டாகுமே குயிலே

மக்ரிபு நேரத்தில் வாசற் பெருக்காதே மயிலே அது
பகலிலளந்த படியைக் குறைக்குமே குயிலே

துப்புர வில்லாமற் றொழுகனைச் சேராதே மயிலே அது
மூப்பது வேதமொழிந்தவர் சொன்னாரே குயிலே

பூமியதிரவே பூண்டடி வையாதே மயிலே நல்ல
க்ஷேமித்த வாழ்வும் நிறையுங்குறையுமே குயிலே

தூக்கம் பிடித்துடல் சோம்பித்திரியாதே மயிலே அது
ஏக்கம் பிடித்ததே இரணங்குறையுமே குயிலே

வம்பான பேச்சுகள் வாயிலெடுக்காதே மயிலே அதிற்
றுன்பங்கள் வந்து தொடர்ந்து பிடிக்குமே குயிலே

கணவனைக் கண்டால் கடுகவெழுந்திரு மயிலே நல்ல
மனையாட்டி யென்றுன்னை வாழ்த்திக் கொள்வாரடி குயிலே

காவிக ளிட்டுக்களித்து நகையாதே மயிலே அது
தேவடியாட் கென்று செப்பிக் கொண்டாரடி குயிலே

கண்ணை யுருக்கிக் கணவனைப் பாராதே மயிலே உன்னைப்
புண்ணாக்கி அட்டைப் பிடுங்க விடுவாரே குயிலே

எளியோரைக் கண்டா லிகழ்ச்சியாய்ப் பேசாதே மயிலே நானே
பழிகாரி யென்றுன்னைப் பட்டோலைத் தீட்டுவார் குயிலே

பெருவிர லுற்றுநீ பேணி நடந்தாக்கால் மயிலே உன்னை
ஒருவனு சையுற்று வந்தா லழிவானே குயிலே

அஞ்சுமோ ராறு மகத்திற் றெளிந்திக்கோ மயிலே நல்ல
இன்சொல் மூலமும்ம தீடேற்ற மாக்குவார் குயிலே

சற்குரு சொல்லைத் தவறுமற் கொண்டுவா மயிலே நல்ல
சொர்க்க முனக்குண்டு தூயோன் சொன்னனடி குயிலே

பூணா மிட்டால் பிலுக்கித்திரியாதே மயிலே அது
நாணமற் கெட்ட நடத்தைகளல்லவோ குயிலே

மூக்காடு போட்டு முகமேற்பாராதே மயிலே கண்ணிற்
செக்காடுவா ரென்று செப்பினது பொய்யோ குயிலே

நல்லரை நாவில் நகைத்துப் பகையாதே மயிலே அது
பொல்லரங்கு வந்து பிழையாய் முடியுமே குயிலே

அன்னையை தந்தையை அன்பாய் வணங்கிக்கோ மயிலே இனிப்
பின்னை யுனக்குப் பெருநன்மை வேண்டுமோ குயிலே

அஞ்சிலே யொன்றை யறிவாற் றெறிந்துக்கோ மயிலே நீ
நெஞ்சிலே யொன்றை நினைக்குமின்னமே குயிலே

புருஷன் சொற்றட்டிப் புறம்பே போகாதே மயிலே நானே
வரிசை நபிகள் மன்றுட மாட்டாரே குயிலே

புழுக்கைகளென்றே யிழிவாகப் பேசாதே மயிலே நல்ல
ஒழுக்க மில்லாதவர்கள் புழுக்கைகளாவாரே குயிலே

பொய்யுந் திருடும் புறமும் விடுவாயே மயிலே நீ
மெய்யு மறிவும் விளங்கி யிருப்பாயே குயிலே

ஈயாத பாவி இருந்தென்ன போயென்ன மயிலே அந்தக்
காயா மரமெட்டிக் காய்த்தென்ன பூத்தென்ன குயிலே

எத்தீம்களோடு யெதிராடிக் கொள்ளாதே மயிலே நானே
பத்தினி நாச்சியார் பாவியென்பாரடி குயிலே

கள்ள புருஷனைக் கொள்ள நினைக்காதே மயிலே உன்னை
அள்ளற்கிடங்கி லழுந்தக் கவிழ்த்துவார் குயிலே

தலைவன் மொழியை நீ தட்டி நடந்தாக்கால் மயிலே நானே
கொலைபாவி யென்றுன்னைக் குழியுள் நெருக்குமே குயிலே

ஆளனுக் குந்தனமு மெல்லாங் காட்டிக்கோ மயிலே நானே
வாழுமவ் வாழ்வுக்கு வல்லோனுரைத்தானே குயிலே

துணைவி யருமைத் துரோகி யறிவானோ மயிலே காளை
கணவனருமையைக் கள்ளி யறிவாளோ குயிலே

ஏழைகுடி கெடுத்தெப்படி வாழலாம் மயிலே பின்னும்
காலைக்கிருப்பது நாமறியோமடி குயிலே

சத்தியமென்று தலையிலடியாதே மயிலே அது
குற்றமதான கொலை வந்து சேருமே குயிலே

உப்பிட்டபேர்களை யுள்ளத்தி லெண்ணிக்கோ மயிலே நிறை
துப்பட்டி யிட்டுநீ சூதாகப் பாராதே குயிலே

தாயாரைப்போலச் சரியாய் நடந்தாக்கால் மயிலே நல்ல
காயகமென்றிந்த நாணிலஞ் சொல்லுமே குயிலே

தோளுக்தலையுக் திறந்து திரியாதே மயிலே காளைத்
தேளுடன் பாம்புத் திகைக்கப் பிடுங்குமே குயிலே

திரேகங்க ளசையக் குலுங்கி நடக்காதே மயிலே காளை
பங்க நரகில் பலிஹத்து லாக்குவார் குயிலே

பாஷைகள் சொல்லிப் பகட்டித் திரியாதே மயிலே காளை
வேசையர் சொல்லி மிரட்டுக் தொழிலடி குயிலே

மாயமருந்து மனதாரச் செய்யாதே மயிலே காளை
நாய்ப்போற் கதறி நரகிற் தவிப்பாயே குயிலே

என்றைக்கிருந்தாலும் மண்ணுக்கிறையடி மயிலே கைப்
புண்ணுக்குக் கண்ணாடி போட்டெனப்பார்க்கேணும் குயிலே

வெள்ளை யுடுத்தி கைவீசி நடக்காதே மயிலே பொல்லாக்
கள்ளியென் றுன்னைக் கலக்கப் படுத்துவார் குயிலே

மாருட்டமாக மதிமோசஞ் செய்யாதே மயிலே மெத்தப்
போராட்டமான பிழைவந்து நேரிடும் குயிலே

கள்ளத் தனமும் ஹறாம் ஸினு வேதுக்கு மயிலே நான்
உள்ளத்தைச் சொன்னால் உடம்பெல்லாம் நோகுதே குயிலே

மணமிருக்க மறுமணம் வேண்டுமோ மயிலே சொந்தக்
கணவ னிருக்க ஹறாம் செய்ய வேண்டுமோ குயிலே

போரிட்டு ஊரார் புரங்களைப் பேசாதே மயிலே அது
நீர் விட்டு இவ்விடம் நீயும் அலைவாயே குயிலே

ஜாலங்கள் பேசித் தூரமாய்த் திரியாதே மயிலே காளை
கோர நரகிற் கொடூரங்கள் செய்வாரே குயிலே

கொண்டோ னிருக்கக் குலைத்தானை வெட்டியாய் மயிலே அது
விண்டோ டத்தம் விழியி லடிப்பாரே குயிலே

பொன்னுக் கிசைந்து புரட்டுகள் செய்யாதே மயிலே அது
பின்னுக்குனக்குப் பெரும்பிழை ரொம்பவே குயிலே

கற்றோர் சொல்லை கருத்தென் றறிந்துக்கோ மயிலே அருள்
பெற்றோர்களென்று பிரபல மாகுமே குயிலே

சேர்ந்த கடன் செய்ய நீ போகலாகாதே மயிலே போனால்
வேந்தன் லஷ்ணத்து மேவி யிறக்குவான் குயிலே

கொட்டும் பிராமணர்க் கோலங்க ளேதுக்கு மயிலே காளைப்
பொட்டிட வேண்டுமோ பொன்னின் குடத்திற்கு குயிலே

பெரியோர்கள் சொல்லை நீ பேணி நடவடி மயிலே அப்பால்
அரிய சுவர்க்க மழகும் பெருவாயே குயிலே

தாய்சொல்லும் வார்த்தை தவறி நடந்தாக்கால் மயிலே நீ
நாய்போ லலறி நரகிற் கிடப்பாயே குயிலே

கோளுகள் சொல்லிக்குடியைக் கெடுக்காதே மயிலே நாளைப்
பாழு நரகிற் பாம்பு பிடுங்குமே குயிலே

தாளாண்மைப்பேசி தரையிற் கவிழாதே மயிலே நெடுங்
கோடாலிக் கொம்புக் குலத்துக்கே டல்லவோ குயிலே

வெறுத்துக் கணவனை வேருக வெண்ணினல் மயிலே பூவில்
பருத்திப் படும்பாடு பட்டழி வாயடி குயிலே

பிசுமிக்கா லிட்டு நீ மேலாய் இருந்துக்கோ மயிலே பொல்லாத்
துஷ்டமனெல்லாம் வெகு தூராக நிற்குமே குயிலே

மாயங்களான மயக்கத்தைத் தள்ளடி மயிலே நல்ல
நாயகமென்ற நடத்தையைக் கொள்ளடி குயிலே

விண்ணுக் கழகாக வீசும் நிலாவொளி மயிலே நல்ல
பெண்ணுக் கழகுதான் பேசா திருப்பது குயிலே

வெள்ளியும் திங்களும் வீணிலழுகாதே மயிலே நாளைக்
கொள்ளி நரகிற் கொதிக்க அடிப்பிப்பார் குயிலே

அயலார் புருஷர்மே லாசை நீ வையாதே மயிலே பொல்லா
மையான பேச்சுகள் வாயிலெடுக்காதே குயிலே

வாய் குற்றம் விட்டால் வரிசை யுனக்கடி மயிலே முத்து
மூக்குத்தி யிட்டால் முகத்துக்கழகடி குயிலே

உண்மையைச் சொல்லி யுலகத்தில் வாழடி மயிலே கெட்ட
தின்மைக ளெல்லாந் தீர்ந்தோடிப் போகுமே குயிலே

சுன்னத்து நோன்பு தொழுகை மறக்காதே மயிலே நல்ல
ஜன்னத்து வாசற் றிறந்து கொடுக்குமே குயிலே

பொல்லாத பேச்சுக்கும் போகவு மாகாதே மயிலே நீ
இல்லாத பேச்சை யெடுக்கவு மாகாதே குயிலே

பெரியோரைக் கண்டிடில் பேணி நடந்துக்கோ மயிலே நல்ல
அறிவாளர் வந்திடி லஞ்சிப் பணிந்துக்கோ குயிலே

பின்புத்தி யாலே நீ வெட்கத்தை விட்டாக்கால் மயிலே அது
பெண்புத்தி கொஞ்சமாய்ப் பேசிக்கொண்டாரடி குயிலே

கணவன் மொழிக்கு நீ கசடாக சொல்லாதே மயிலே நாளைப்
பிணமாய் நரகிற் புழுவாய்ப் புரளுவாய் குயிலே

வெளியில் மிழுகவிரைந்தடி வையாதே மயிலே நாளைக்
குழியினிற் பாம்பு குழலிற் பிடுங்குமே குயிலே

கவரை யிடத்தி நீ கையை கொடுக்காதே மயிலே நாளைத்
துவரை யடித்தாற்போற் றூக்கி யடிப்பாரே குயிலே

மஞ்சள் குளித்து வருவார் முன்னில்லாதே மயிலே நீ
கொஞ்சிக் கணவனைக் கூடிக் குலாவிக்கோ குயிலே

கள்ளஹுருமிற் கடுஞ்சூது மாவதேன் மயிலே அந்தப்
பிள்ளையைத் தள்ளிப் பெரும் பாவங் கொள்வதேன் குயிலே

கருவை யறுத்தேயுருவங் கொலைத்தாக்கால் மயிலே உந்தன்
கரும நரகிற் சுடுவார் கெடுவாயே குயிலே

துன்பஸினவிற் றுடர்ந்து சூலானையே மயிலே நாளை
ஒன்பது வாச லுதிரஞ்சி ழோடுமே குயிலே

இரத்தமுஞ் சீழும் நெருப்பாக வாரியே மயிலே அப்போ
கர்த்தன் மலக்குகள் கதற வடிப்பாரே குயிலே

வாரிகொடுத்து மதிகெட்டு வந்திடில் மயிலே நாளை
ஓரிப்போல் வாய்விட்டுளரிக்கிடப்பாயே குயிலே

ஆகாத சொல்லை யறிவென் றெடுக்காதே மயிலே நீ தான்
போகாத விடத்திற்குப் போகவு மாகாதே குயிலே

அன்பாகப்பேசி அதபைக் கெடுக்காதே மயிலே நாளை
துன்ப நரகில் நாய்கிளறிப் பிடுங்குமே குயிலே

வட்டிகள் வாங்கி வயறு வளர்க்காதே மயிலே நாளை
வெட்டிச் சதையை விழுங்க வடிப்பாரே குயிலே

ஆருக்கும் பொல்லா வரும் பிழை செய்யாதே மயிலே இந்தப்
பாருக்குள் உன்னேப்போற் பாக்கிய ரில்லேயே குயிலே

ஆஷாரு கோன்பை அதாவாய்ப் பிடியடி மயிலே நாளே
வேசாற விட்டு நீ விஸ்தி பெறுவாயே குயிலே

நெஞ்சறியப் பொய்யை நிகரென்று சொல்லாதே மயிலே சூழ்ந்த
பஞ்சுபோ லீமான் பறந்து விடுமடி குயிலே

சோபத்து நோன்பைத் துடர்ந்து பிடியடி மயிலே நாளே
ஆபத்துனக் ககன்று போய் நீங்குமே குயிலே

ஒக்கப் பிறந்தாரை ஊதாரி கொள்ளாதே மயிலே அவர்
செக்குபோ லொக்கத் திரிந் தலேவாயே குயிலே

பெண்புத்தியாலே பிறர் மூகம் பார்த்தாயே மயிலே நீ
தன்புத்தியாலே யல்லோ தாழ்வுப் பட்டாயடி குயிலே

அறிவாளர் சொல்லே அசடாக வெண்ணுதே மயிலே நல்ல
குறியாகக் கேட்டு குணமாய் நடந்துக்கோ குயிலே

அஞ்செழுத் துள்ளே யறிவேது சொல்லடி மயிலே அதை
பிஞ்செழுத் தாகவே பேசும் பிரானடி குயிலே

மெய் குருபாதம் விளம்பிப் பிடியடி மயிலே மற்ற
பொய்க் குருவைச் சேரில் பிழைதான் வருமடி குயிலே

வெறுத்தாக்கால் மூன்று நாள் வீடுற வாடிக்கோ மயிலே அது
பொறுத்தரசாண்டதை புகழ் நபி சொன்னுரே குயிலே

ஊராரைப் பார்த்து நீ யுள்ள மெரியாதே மயிலே அனு
வேரறவே கெடும்வசன மறியாயோ குயிலே

உற்றுரைச் சேர்த்து நீ யுறவுங் கொண்டாடிக்கோ மயிலே மனம்
ஏத்தாலே வாழலா மொத்தாலே வாழலாங் குயிலே

உன்னுசை கொண்டே யுருகிக் கரைந்தாரே மயிலே அடி
என்னுசை யுன்னேயு மேன்தான் கெடுத்தது குயிலே

கொண்டவனுக்கு நீ ரெண்டகப் பண்ணினுல் மயிலே நீ
கண்டவனுக்குக்கெல்லாம் பெண்டாயிருப்பாயே குயிலே

பொறுமை யருமையும் புத்தியும் தேடிக்கோ மயிலே கொடிய
வறுமை சிறுமை கவலேயுந் தள்ளடி குயிலே

கூறும் பெரியோரைக் கூடிகொண்டாடிக்கோ மயிலே பூவால்
நாருமணம் பெற்ற ஞாயமறியாயோ குயிலே

ஈன்றவர் சிந்தை யெரிய நீ பேசாதே மயிலே நாளேத்
தூண்டி லகப்பட்ட மீன் போலலேவாயே குயிலே

கலைப்பான பேச்சைக் கருத்தாக வெண்ணாதே மயிலே வேடன்
வலையிலகப்பட்ட மான்போல் விழிப்பாயே குயிலே

விதியினால் வாழுவார் மேதினியிலுள்ளவர் மயிலே நம்
மதியினால் வாழும் வல்லமை யில்லையே குயிலே

ஈமானை நெஞ்சி லிருதயம் பண்ணிக்கோ மயிலே நம்மை
ஈமான் நபிதஞ் சேர்க்கதல்லோ கொள்ளலாங் குயிலே

தீனென்னும் வேதத்தை சிந்தையில் மறவாதே மயிலே நல்ல
வானகப் பெண்ணுடன் வாழ்ந் திருப்பாயே குயிலே

கர்த்தன் முஹம்மதைக்கண்டு கொண்டாடிக்கோ மயிலே நல்ல
சொர்க்கத்து ஹூறுல்மீன் தோழமையாகுவாய் குயிலே

ஆசைக்குத் தேடி யறிந்து தெரிந்துக்கோ மயிலே நல்ல
மாசக்கென்றுன்னை வகுத்து வைத்தானடி குயிலே

கர்த்தன் நபியைக் கனவிலு மறவாதே மயிலே நாளை
முத்து முஹம்மது மோக்ஷத்திலாக்குவார் குயிலே

அகத்துக் கவலையை அப்புறத்தள்ளடி மயிலே உந்தன்
முகத்தினி லுள்ள முசிபத்து நீங்குமே குயிலே

பந்த மிகுந்தாக்கால் பாக்கிய முண்டடி மயிலே நல்ல
சந்த மிகுந்தாக்கால் சாதங்கிடைக்குமோ குயிலே

சூதை விரும்பிச் சுகங்களைக் காட்டாதே மயிலே அது
பாதகமென்று புயகாம்பர் சொன்னாரே குயிலே

திட்டாதே வாயினாற் றின்னாதே பாக்கிலை மயிலே தின்றால்
மீத்தவ ளுந்தன் முகத்தை விட்டேகாளே குயிலே

மாமிதனக்கு மரியாதை செய்யடி மயிலே உந்தன்
மாமோக வாசைக் கணவனைப் பெற்றாளே குயிலே

அஞ்சாத்தனிவழி நெஞ்சாரப் போகாதே மயிலே போனாற்
சஞ்சலப்பட்டுத் தணல் மெழு காவாயே குயிலே

முறிவினைப் பேசி முகத்தை முறியாதே மயிலே நாளை
இருதலைக் கொள்ளி யெறும்பு கடிக்குமே குயிலே

அநியாயங் கண்டு அரும்பிழை செய்யாதே மயிலே நாளை
அருமை குலைக்து ஆவேசங் கொள்வாயே குயிலே

பிள்ளையைத்திட்டிப் பெரும்பாவங் கொள்ளாதே மயிலே பின்னால்
உள்ளமகிழ்ந்து நீ ஊதாரியாவாயே குயிலே

மூக்காட்டு பெண்ணுக்கு மூக்கினிற் கோபமேன் மயிலே அது
மற்காட்டு மூந்தன் கணவனுக் காகாதே குயிலே

இசைராகங் கேட்டு நீ இன்பங்கொள்ளாதடி மயிலே காலைக்
கசையான செப்பூசி காதிலிடுவாரே குயிலே

கட்டுங் கணவனை விட்டுப் பிரியாதே மயிலே விட்டால்
கட்டாற்றுக் கீரைப்போற்கெட்டலை வாயடி குயிலே

உந்தன் கணவனுக்கு சதிசெய்தால் மயிலே அவர்
வெந்து நரகில் விசனப்படுவாரே குயிலே

ஏழைப் புருஷனென் றெள்ளலாய்ப் பேசாதே மயிலே காலை
வாளைக்கொண்டுன் னுவைவகிர்ந்து பிளப்பாரே குயிலே

குபிரான சாஸ்திரக் குறிவைத்துப்பாராதே மயிலே அதிற்
தவறாத ஈமான் கருதிப் பறக்குமே குயிலே

புருக்காளை நெஞ்சிற் பிழையாக வெண்ணாதே மயிலே உன்னில்
ஒரு காலு நீ சொர்க்க மூற்றிட மாட்டாயே குயிலே

பணங்களைத் தேடி நீ பாரிற் புதையாதே மயிலே காலை
பிணந்தனிற் பாம்பு போட்டுப் புறட்டுமே குயிலே

சொக்கட்டான் சோழி சுகமென்றே யாடாதே மயிலே அது
இக்கட்டுப்போலே விடர் கூறதாகுமே குயிலே

குட்டினியாகவே கூட்டிக்கொடுக்காதே மயிலே காலை
கட்டி நெருப்பாலே காச்சுப் பிடுங்குவார் குயிலே

பத்தினி மாதரைப் பழிசொல்லுஞ் சொல்லாதே மயிலே நீ
பெற்றிடும் பெண்ணுக்குப் பின்னர் குறைவரும் குயிலே

நிகுமத் துள்ளானை நினைவில் வணங்கிக்கோ மயிலே அதனுல்
கியாமத்து நாள் நல்ல கீர்த்தி பெருகுவாய் குயிலே

புண்ணியஞ் செய்து நீ பூவினிற் வாழ்ந்தாக்கால் மயிலே நீ
எண்ணின வெண்ணங்க ளெல்லாம் பலிக்குமே குயிலே

வீரியம் பாராட்டி மேனி பாழாக்காதே மயிலே நல்ல
காரியம் பாராட்டிற் காசினி போற்றுமே குயிலே

தொட்ட கணவனைத் தோசஞ் செய்யாதே மயிலே நீ
குட்டம் பிடித்துக் குறைநோய்கள் கொள்வாயே குயிலே

உள்ளதைச் சொல்வாரை யூதாரி சொல்லாதே மயிலே அது
பள்ளத்தில் வெள்ளம் பறந்தோடி நிற்காதே குயிலே

மூதாக்கள் செய்த முறைப்படி செய்துக்கோ மயிலே அது
மாதாக்கள் செய்தது மக்களுக் கல்லவோ குயிலே

முனபிக்கு சொல்லி முறுவினி கொள்ளாதே மயிலே சொல்லி
பனுவாகி நீயும் படும்பாடு மெத்தவே குயிலே

மண்ணிற் பிறந்தார்க்கு வல்லமை யில்லையே மயிலே அதிற்
பெண்ணைப் பிறந்தார்க்குப் பெருமையுமுண்டோ குயிலே

உண்மையைத்தேடி யொழுங்காய் நடந்தாக்கால் மயிலே செய்த
நன்மையுந் தீமையும் நாயன றிவானே குயிலே

பணத்துக்கோ ரம்புகீ பாரில் இசையாதே மயிலே அவர்
இரணத்துக் கவிழ்தங் கொடுத்தாலுந் தீராதே குயிலே

பெண்ணுவே யாரும் பிரபலம் பேசுவார் மயிலே அதில்
மண்ணும் பெண்ணென்று வகுத்தறியாயோ குயிலே

ஸூரீதுகள் வாங்கி முடுக்கி லடுக்காதே மயிலே அதைத்
தெரிந்து நீ சிந்தையிற் றேடக் கடனடி குயிலே

அஞ்சி லுதித்து நீ அஞ்ஞற் பிறந்தாயே மயிலே அந்த
அஞ்சில் வளர்ந்து நீ அஞ்சிமறியாயோ குயிலே

அலிபோடு லாமுட னருள் ஹேமீமுடன் மயிலே நீ
மெலியாதே நாவில் விடுத்தை விண்டுக்கோ குயிலே

கலிமாவை மூலக்கருத்தோ டிருத்தினல் மயிலே அங்கே
புலிமாமனர் திருப்பொற்பதங் காண்பாயே குயிலே

அஞ்சையுங் கட்டி யறிவோடிருக்கினல் மயிலே பொல்லா
வஞ்சனை போக்கி வாப்பாடு மாவாரே குயிலே

மூச்சுவிளைந்த மூலத்தைப்பாரடி மயிலே அங்கே
பேச்சிவிளைந்த பிரபலங் காண்பாயே குயிலே

மூலத்தின்மேலே முழுத்தா மரையடி மயிலே அதில்
வாலைப்பெண்ணுன மனேன் மணி நிற்பாளே குயிலே

விண்ணேடியோடி வெளித்திரை நீங்கினல் மயிலே கடற்
கண்ணுடிக்குள்ளொரு காரணம் காணுமே குயிலே

இருகண்மையி லிருதயம் பூட்டினல் மயிலே அதிற்
கருபம் நடுவிற் றொடர்ந்து நின்றுடுமே குயிலே

முகத்துக் கண்ணை முருக்கித் திருத்தினல் மயிலே உந்தன்
அகத்துக்கண்கிரி யறிவங்கே காண்பாயே குயிலே

இல்லல்லாஹுவென் றிருதயம் வைத்தாக்கால் மயிலே இனி
அல்லாஹு தீ தாரனு தினம் காண்பாயே குயிலே

செம்மலர்க்குள்ளே சிறந்தெட்டிப் பாரடி மயிலே அங்கே
நன்மையாம் பாத்திமா நாயகம் நிற்பாரே குயிலே

சத்தம் பிறந்த தலமேது சொல்லடி மயிலே அது
பத்தி லிரண்டு பலகாலுங் காண்பாயே குயிலே

எனக்குள் நீயென்று உனக்குள் நானென்று மயிலே அது
தனக்குட்டானய்ச் சமைந்ததறியாயோ குயிலே

நினைவுமனமே நேராக நின்றாக்கால் மயிலே தண்ட
கனவெல்லா முனக்குள் கைவசமாகுமே குயிலே

சற்றுமனது சருகாமல் நின்றாக்கால் மயிலே அதில்
கர்த்தனும் வந்து கலந்தல்லோ பேசுவான் குயிலே

ஊணையொடுக்கி யொருநினை வானக்கால் மயிலே நீயும்
காணுக்காட்சிகள் கண்டு மகிழ்வாயே குயிலே

இந்தப் பிறவி யிகழ்ந்து நீ பாரடி மயிலே அந்த
சொந்தப்பிறவி துறந்தல்லோ தோன்றுங்காண் குயிலே

நித்திரை தள்ளி நினைவும் கனவாகும் மயிலே பின்னும்
உற்றுமுழித்தே யுதித்ததார் சொல்லடி குயிலே

கனவிலுருக்கொண்ட காரணங் கேட்டாயோ மயிலே நம்ம
நினைவிலும் நீரு நிக்காதிருந்தாக்கால் குயிலே

கண்டு நினைக்கக் கருத்துறப் போற்றினல் மயிலே அருள்
உண்டு முனக்கிங் கிடையூறு வாராதே குயிலே

அறுசின்கீழ் நின்றே யறிவுநீ பாரடி மயிலே நாயகன்
குறுசினிற் சத்தம்ஹூவென்று கேட்குமோ குயிலே

சத்தத்தைக் கேட்டுத் தயங்காமல் நில்லடி மயிலே அங்கே
கர்த்தன் முஹம்மதைக் கல்புறக் காண்பாயே குயிலே

மேல்வாசி யேறி விளைந்த தலங் கண்டால் மயிலே ஈராறு
கால்வாசியேறிக் கணபதி சேர்வாயே குயிலே

சுழிமுனை யேறித்துருவங் கடந்தாக்கால் மயிலே அங்கே
வெளிகலைகாலும் வுளையாடி நிற்குமே குயிலே

நாலும்பிறந்த நடுவை யறிந்தாக்கால் மயிலே நல்ல
பாலுங்குடித்துப் பயனுந் தெளிவாயே குயிலே

அற்ற விடத்தி லணுவும் நீ யானக்கால் மயிலே நீ
உற்ற விடத்தி லொருவரு மில்லையே குயிலே

மாயப் பிறவி மயக்கத்தைத் தள்ளடி மயிலே நல்ல
காயாபுரி யுக்தன் கைவசமாகும் குயிலே

மட்டத்துக்குள்ளே மதியைத் திருத்தடி மயிலே திரு
தட்டத்துக் குள்ளே மதிமகந் தோன்றுமே குயிலே

வெண்ணையைக் குவித்து விளக்கா லுருக்கினல் மயிலே அது
யுன்னை யல்லாம லொருவரு மில்லையே குயிலே

மேலோனும் நீயும் வினவித்தனதானல் மயிலே உயிர்
காலனர் வாங்கவுங் கட்டளை யில்லையே குயிலே

இளங்தைப் பருவத்தி லெண்ணித்தெரிய விட்டால் மயிலே பின்பு
தளர்ந்தப் பருவத்திற் றள்ளாடி நிற்பாயே குயிலே

வால வயதில் முரீதுகள் வேண்டிக்கோ மயிலே அதின்
கால மறிந்து கடவுளைத் தேடிக்கோ குயிலே

மாண்டிடும்போது முரீதுகள் தன்னையறியாவிட்டால் மயிலேஅது
மக்க மூஹம்மது மன்ருட்ட மில்லையே குயிலே

அங்க மிருக்கையி லெங்கு முலாவலாம் மயிலே தங்கள்
அங்க மூடைந்தாக்காற் றங்குவ தெங்கனே குயிலே

மந்திரத்தா லு மெழுத்தாலு மாகுமே மயிலே இந்தத்
தந்திர பேச்சைத் தரையினிற் றள்ளடி குயிலே

மவுன மெழுத்து மனமுஞ் சரியிட்டால் மயிலே நீ
சுவன பதிக்கும் துரைத்தனப் பெண்ணடி குயிலே

பூதலந் தன்னிலே பொய்க்குரு வானவர் மயிலே இரு
காதையு மூடியே கண்ணைமே லேற்றுவார் குயிலே

உன்னைப்பிடிக்க வுபாய மறியாமல் மயிலே இரு
கண்ணைச் சிமிட்டிக் கடும் ப்ார்வை காட்டுவார் குயிலே

மாடுபோ லுண்டு மயக்கமாய்த் தூங்குவார் மயிலே இது
கேடென்றவர்கள் கனவிலும் மெண்ணாரே குயிலே

பழித்துப் பெரியோரை பாராம லேசுவார் மயிலே அந்த
வெளிச்சத்தை காட்டுவேன் வீட்டிலே வாவென்பார் குயிலே

மிச்ச மில்லாமற் குபாயங்க ளாகவே மயிலே அங்கை
பழித்திடுஞ் செம்பொன் பறிக்கவே தேடுவார் குயிலே

சண்டாளப் பேரைச் சதமென் றெடுக்காதே மயிலே அவ
பெண்டாள வுன்பேற் பிரியப்படுவாரே குயிலே

மூரீது கொடுப்பாருக்கு மூன்று குணமுண்டு மயிலே அதை
தெரிந்தாரைப் பார்த்துத் திருவடி போற்றிக்கோ குயிலே

இன்பங்கள் வந்தால் விதமென் றெடுக்கார்கள் மயிலே அவர்
துன்பங்கள் வந்தால் ஷுக்கூறு செய்வாரடி குயிலே

தானென்ற வானவம் காட்டிலே பேசாதே மயிலே எல்லாந்
தானென்று கொண்டவர் சற்குருவல்லவோ குயிலே

வாக்கினி லொன்று மனதிலொன்றெண்ணுதே மயிலே காளை
நாக்கினில் தூண்டுகள் காட்டியே தூக்குவார் குயிலே

மனையிற் குறுஞ்செட்டு மக்களுக்காகவே மயிலே பொல்லா
வினையில் வருங்கேடு வேண்டவும் பேசாதே குயிலே

களறி விம்பையிற் கண்ணோரம் பாராதே மயிலே காளை
குளறியே கண்களைக் கீறியெடுப்பாரே குயிலே

வீணான பேச்சுக்கு வாணாலை மாய்க்காதே மயிலே கண்ணில்
காணாப் பிறைக்கு நீ கையேந்தி நில்லாதே குயிலே

சண்டைக ளிட்டுச் சபையினில் பேசாதே மயிலே அது
கொண்டவனுக்கறி வாண்மை குறையுமே குயிலே

இந்தாப் பிடியென் றெடுத்துக் கொடுக்காதே மயிலே முன்னர்
சொந்தக் கணவனைத் தோற்றத் தறியாயோ குயிலே

சூலாகி மெத்தவுந் தூர நடக்காதே மயிலே செய்த
கூலி குறைத்துக் குறைவு கொள்ளாதே குயிலே

சற்குரு வானோரைச் சார்ந்து பணிந்தாக்கால் மயிலே அவர்
மெய்க்குரு வானவிட மல்லோ காண்பிப்பார் குயிலே

நல்லாரைச் சேர்ந்தாக்கால் நடக்கையும் நல்லதாம் மயிலே கெட்ட
பொல்லாரைச் சேர்ந்தாக்கால் புத்தியும் போகுமே குயிலே

விண்ணாகி மண்ணாகி வெளியு மொளியுமாகி மயிலே அது
அண்ணாகி இண்ணாகி பறுலா யிருந்ததாம் குயிலே

தாயாகித் தமராகித் தக்கோர் பிறப்பாகி மயிலே பெற்ற
சேயா யுடலாய்ச் செகத்திற் பிறந்ததாம் குயிலே

மூணந்தானே இத்தனை மகத்துவமானது மயிலே அந்த
இனந்தா னறியாம லேன் சும்மா பேசுகிறாய் குயிலே

நீருள்ள மட்டும் மீனங்கே துள்ளிடும் மயிலே சுத்த
நீரங்கே யற்றக்கால் மீனெங்கே துள்ளுங்கான் குயிலே

மனமுள்ள மட்டுக்கும் வல்லமை பேசுவாய் மயிலே இந்த
மனமு மொடுங்கினால் நினைவெங் கிருக்குங்கான் குயிலே

மூவத்தை தடுக்குமுன் மவத்தாகப் பாரடி மயிலே காலன்
மவுத்தை மறந்தாக்கால் கைசேதப்படுவாரே குயிலே

பிரியுமுன் பிரிந்தா லோவி தம் வெளியாகும் மயிலே தன்னைத்
தெரியுமுன் னிறந்தாக்கால் தேறுவ தேங்ஙனே குயிலே

கொஞ்சிய வாழ்வுங் குலாவும் பலனெல்லாம் மயிலே கெட்ட
வஞ்சிதன் றெண்ணியுன் பகுமன தாற்பார் குயிலே

பெண்ணாசை விட்டு நீ பேணி நடந்தாக்கால் மயிலே கெட்ட
கன்னூசு வந்தால் காலா லுதைப்பாயே குயிலே

இல்லல்லா தன்னை அகத்தி லறியா விட்டால் மயிலே நீ
பொல்லா நரகிற் புகுவது மெய்யடி குயிலே

பார்த்து மூரீதைப் பருவத்திற்றேடிக்கோ மயிலே நீ
நூற்றுக் கிருக்கவுஞ் சீட்டுமுண்டா சொல்லுங் குயிலே

ஈரஞ்சு கூடு மிளக்கை பருவத்தில் மயிலே நீ
ஓரஞ்சு தேடி யுனக் கடனடி குயிலே

பூவிலே வாசம் பிறந்த விதமென்ன மயிலே கலி
மாவிலே ஈமான் கலந்த விதமென்ன குயிலே

கல்லில் நெருப்புக் கலந்த விதமென்ன மயிலே இருள்
அல்லிற் பகலமைந்த விடமல்லோ குயிலோ

தன்னை யறிந்து தரிபாட்டி லானக்கால் மயிலே அங்கே
சொன்ன வழியெல்லாஞ் சோதிபோற் றோணுமே குயிலே

மெத்த புசிப்பாலே மேனிற் சுகத்தாலே மயிலே மையல்
நித்திரையாலே நினைவை மறந்தாயே குயிலே

நித்திரைவிட்டு நினைவோ டிருந்தால் மயிலே இறை
முத்தியைப் பெற்ற முஹம்மதை காணலாங் குயிலே

மூலப் பதியின் முளைத்த விதமென்ன மயிலே அது
வேலைப் பதியில் வெளிகண்டு தோற்றுமே குயிலே

தோற்றுமொளிவை தொடர்ந்து நீ கண்டாக்கால் மயிலே சொல்
வேற்றுமை யென்றும் விளக்கவு மாட்டாயே குயிலே [லால்

முத்தொன்றி னாலே முழுதும் படைத்தானே மயிலே ஒரு
வித்தொன்றி னாலே வினவத் தெளியடி குயிலே

ஐயனெனு மட்சரங் கண்டு தெளியா விட்டால் மயிலே சுடர்த்
துயிலெனுங் கண்ணடி தோற்றவு மாட்டாதே குயிலே

குவிந்து விரிந்த உப்பை யறிந்தாக்கால் மயிலே முகம்
நிமிர்ந்து குடித்து தெரியும் பெருவாயே குயிலே

பூரண முண்டான பாதையைக் கண்டாக்கால் மயிலே வெகு
காரணங் கண்டு நீ காட்சி பெருவாயே குயிலே

சூதக முற்றிச் சுருபங் கடந்தாக்கால் மயிலே பின்னுஞ்
சூதவி மூன்றாலே சோதித் தெரியுமே குயிலே

வேண்டிக் கல்வி வெறிகொண்ட நாய்போலே மயிலே நீ
யுண்டலை இரத்தம் புசிக்கக் கொடுத்தாயே குயிலே

பேதை யமிர்தம் புசிக்கத் தெரியாமல் மயிலே நீ
சூதகமுண் டமான் சுத்த மிழந்தாயே குயிலே

பாதகர் சொல்லைப் பலனென்று கொள்ளாதே மயிலே பொல்லா
நாதன் குடித்து நரகி லமிழாதே குயிலே

உன்னுகை நாக்கையுள்ளா யுணர்ந்தாக்கால் மயிலே மதி
அண்ணுக்கி லூரு மமிர்தந் குடிப்பாயே குயிலே

பாலைக் குடித்தருள் பாக்கியம் பெற்ருக்கால் மயிலே நல்ல
வாலைப் பருவ வயதுனக் கில்லையோ குயிலே

மூளையைப் பற்றி நினைவு மயங்குமே மயிலே நீ
சூழவனைந்து துறந்துக்கோ ஞானத்தாற் குயிலே

ஊசியிற் காந்த முருகிப் பிடித்தாற்போல் மயிலே நீ
தேசியைப் பற்றித் திரிலோகம் பாரடி குயிலே

மக்க முஹம்மது வாசலுக்குட் சென்ருக்கால் மயிலே ககன
சொர்க்க மருஷுங் குருசுக் துலங்குமே குயிலே

அருகினில் மாயன் கொலுவங்கு தோன்றினல் மயிலே நல்ல
தெரிசனை கண்டு திருவடிப் போற்றிக்கோ குயிலே

முச்சந்திக் குள்ளே முனைப்பாரி விட்டாக்கால் மயிலே இறை
தற்சொருபத்தை நீ சார்ந்துகொள் வாயடி குயிலே

கைவச மாகக் கருத்தோடு நாடினல் மயிலே இனி
ஐவருமே கூடி யறிவு புரிவாரே குயிலே

சஞ்சலவாழ்வைச் சதமென்றிங் கெண்ணுதே மயிலே இது
கொஞ்சமென் றெண்ணிக்குருவை தெரிந்துக்கோ குயிலே

மக்களும் பெண்ணும் மனவி யுடைமையில் மயிலே நாளைத்
தக்கமென் றெண்ணி நீ தன்னை மறந்தாயே குயிலே

திரியுஞ் சடத்தைத் தெண்டித்துப் பாராட்டாமல் மயிலே நாளைப்
பிரியும் பொழுதுமே பேதையாய் முழிப்பாயே குயிலே

மஃரிபத்தான வழிகண்டு நில்லடி மயிலே பொல்லாக்
கருமமெதெல்லாங் கசடென்றே தள்ளடி குயிலே

புருஷனிடத்திற் பெண்சாதிக்குச் சொர்க்கமே மயிலே இறை
அறுசிற் பெரியோ னஹ்மதிக்கோதினன் குயிலே

பத்தா தனக்குப் பணிந்து நடந்துக்கோ மயிலே கெஞ்சிக்
கர்த்தன் முஹம்மதைக் கண்ணுலே காண்பாயே குயிலே

அஞ்சித் தெளிந்தே யறிவால் வணங்கினல் மயிலே நாளைக்
கொஞ்சியே சொர்க்கத்தில் கூடிக்குலாவலாங் குயிலே

துங் கணவனுக் கேற்க நடந்தாக்கால் மயிலே காலைக்
கர்த்தன் நபி மகள் காட்சி பொறுவாயே குயிலே

ரியோ டறிந்து மகிழ்ந்து நடந்தாக்கால் மயிலே நீ
அழியாப் பதியிலரசாண் டிருப்பாயே குயிலே

த்திமா னுக்காலித்தனை போதாதோ மயிலே நீ தான்
ஒத்து நடந்தாக்காலித்தனை சொல்வதேன் குயிலே

பண்புத்தி மாலையைப் பேணி நடந்தாக்கால் மயிலே நீ
விண்ணுற்று ஜென்னத்தில் வீற்றிருப் பாயடி குயிலே

அன்ன நடையாளே மின்னி னொளியாளே மயிலே நீ
எக்காளுஞ் சொர்க்கத்தில் லின்பமாய் வாழ்வாயே குயிலே

ங்கள மாகவே எங்கள் முஹம்மது வாழி நல்ல
சங்கை நபிமகள் பாத்திமா நாயகம் வாழி

லியார் கூட நபி மார்கள் யாவரும் வாழி நல்ல
அலியார் பெற்ற ஹஸனு ஹுஸைனுமே வாழி

ங்க ளொலி மாருதீனுள்ள பேர்களும் வாழி மிக
பொங்கு பெரியவர் பூவையர் யாவரும் வாழி

பண்புத்தி மாலையைப் பேசிப்ப டித்தோரும் வாழி நானுங்
கண்ணுற்றுக் கண்டு கருத்தாய் நடந்தோரும் வாழி

பெண் புத்தி மாலை முற்றிற்று.



Printed at Shahul Hameedia Press, Madras.

# மிபுத்தாஹுஸ்ஸலாஹ்
# பீ யீலாஹின்னிகாஹ்

(இப்புத்தகம் இல்லறவாசிகள் ஒவ்வொருவருக்கும் அவசியம் வேண்டியது)

இதில் நிக்காஹுடைய வரிசைகளும், அஹ்காம்களும், ஸ்திரீ புருஷருடைய குண லக்ஷணங்களும், ஒவ்வொருவரும் இன்ன குணமுடையவர்களென்று பார்த்த மாத்திரத்தில் கண்டறியக்கூடிய வழியும், ஸ்திரீ புருஷர்கள் அவசியம் அறிய வேண்டிய அநேக ரகசியங்களும், ஒரு புருஷன் விரும்பிய மனைவியையும், ஒரு ஸ்திரீ விரும்பிய கணவனையும் அடைவதற்கு வேண்டிய இஸ்முகளும் அடங்கியிருக்கின்றன.

இவையன்றி ஸ்திரீ புருஷருக்கிடையில் முஹப்பத் உண்டாவதற்கும், ஹமல் உண்டாவதற்கும், ஹமலைக் காப்பதற்கும் அவசியமான இஸ்முகளும், ஹமலில் உண்டாகக்கூடிய பலவகை வியாதிகளுக்கு அரிய ஔஷதங்களும் கூறப்பட்டிருக்கின்றன.

வாசிப்போருக்கே இந்நூலின் அருமை விளங்கும். புதிய பதிப்பு கிளேஸ் காகிதம் பைண்டு செய்யப்பட்டது.

விலை ரூ. 28-00

---

கிடைக்குமிடம்:—

ஹாஜி எம். எ. ஷாஹுல் ஹமீது அண்டு ஸன்ஸ்,
நெ. 10, ஹைரோட், திருவல்லிக்கேணி, சென்னை 5.